१

श्री गुरुभ्यो नमः

# श्री शङ्करोदन्तम्



१

श्री गुरुभ्यो नमः

# श्री शङ्करोदन्तम्

ब्रह्मविद्यारत्न - पुराण मन्त्ररत्न

वैद्य एस्.वी. राधाकृष्णशास्त्रिविरचितम्

श्री काञ्चीकामकोटिपीठाधिपति श्री शङ्कराचार्य

श्री जयेन्द्रसरस्वती श्री चरणानां

पीठाधिरोहण स्वर्णजयन्त्यवसरे

श्री चरणानां चरणयोः समर्पितम्

संस्कृतविद्यासमितिः

**SAMSKRIT EDUCATION SOCIETY**

148-150, Luz Church Road, Mylapore, CHENNAI - 600 004

सुभानु-मार्गशीर्षे 2003

ॐ

# गुरुवन्दनम्

श्री गुरुभ्यो नमः

गुरवे सर्वलोकानां भिषजे भवरोगिणाम् ।
निधये सर्वविद्यानां दक्षिणामूर्तये नमः ॥

गुरुर्ब्रह्मा गुरुर्विष्णुः गुरुर्देवो महेश्वरः ।
गुरुः साक्षात्परं ब्रह्म तस्मै श्री गुरवे नमः ॥

श्रुतिस्मृतिपुराणानामालयं करुणालयम् ।
नमामि भगवत्पाद शङ्करं लोकशङ्करम् ॥

दयमानदीर्घनयना देशिकताऽभीति भव्यदक्षकरा ।
वामकरनिहित दण्ड ा भाति पुरः सा गुरोमूर्तिः ॥

अपार करुणा सिन्धुं ज्ञानदं शान्तरूपिणम् ।
श्रीचन्द्र शेखरगुरुं प्रणतोऽस्मि मुदाऽन्वहम् ॥

परित्यज्य मौनं वट ाधःस्थितिं च व्रजन्भारतस्य प्रदेशात्प्रदेशम् ।
मधुस्यन्दिवाचा जनान् धर्ममार्गे नयन् श्रीजयेन्द्रो गुरुर्भाति चित्ते ॥

नमामः शङ्करान्वाख्य विजयेन्द्र सरस्वतीम् ।
श्रीगुरुं शिष्ट मार्गानुनेतारं सन्मतिप्रदम् ॥

# ஸ்ரீ சங்கரோதந்தம்

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீசங்கராசார்ய **ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதீ** ஸ்ரீசரணர்களின் திருவடிகளில் அவர்களது பீடாதிரோஹண ஸ்வர்ண ஜயந்தீயின் போது காணிக்கையாக இது ஸமர்பணம் செய்யப் பெறுகிறது.

பரமபூஜ்ய ப்ராதஸ் ஸ்மரணீய ஸ்ரீ மஹாபெரியவாளின் திருவருளாலும் பூஜ்ய ஸ்ரீ பெரியவாளின் அருளாசியாலும் 1978ல் ஸ்ரீபகவத்பாதர்களின் வரலாற்றைப் பல சங்கரவிஜய நூல்களிலிருந்தும் தொகுத்து ஸ்ரீசங்கர விஜய மகரந்தம் என்ற ஸம்ஸ்கிருதநூல் 32 ஆஸ்வாதங்களும் 2787 சுலோகங்களும் கொண்டதாக அமைத்து, காலடியில் 1978ல் ஸ்ரீ சங்கர பகவத் பாதர்களின் கீர்த்திஸ்தம்பபிரதிஷ்டை விழாவை ஒட்டிய பூஜ்ய ஸ்ரீ பெரியவாளின் பீடாரோஹண ரஜத ஜயந்தீ விழாவில் ஸ்ரீ சரணர்களின் திருவடிகளில் ஸமர்ப்பிக்கிற பாக்யம் கிட்டியது. அந்த நூலின் ஸங்கிரஹ நூலாக ஸ்ரீசங்கரவிஜய மகரந்த ஸாரம் என்ற நூல் 1500 சுலோகங்கள் கொண்டதாக 1980ல் ஸமர்ப்பிக்கப் பெற்றது. அந்த இருநூல்களின் வரலாற்றுச் சுருக்கமாக ஸ்ரீ சங்கரோதந்தம் இந்த ஸ்வர்ண ஜயந்தியின் போது ஸமர்ப்பிக்கப் பெறுகிறது.

சிறுவயதில் ஸம்ஸ்கிருத மொழிப் பயிற்சிக்கான அறிமுக நூலாக ஸ்ரீராமோதந்தம் உதவியதை ஒட்டிச் சிறிதளவு ஸம்ஸ்கிருத பரிசயம் பெற்றவரும் ஸ்ரீபகவத் பாதர்களின் வரலாற்றைப் பக்தியுடன் நினைவிற் கொள்ள உதவுவதாகத் தமிழுரையுடன் இந்நூல் எழுதப்பெற்றது.

பூஜ்ய ஸ்ரீகுருசரணர்களின் திருவருள் என்றும் துணை நிற்கிறது. அவர்களது அருளால் உருப்பெற்று 27 ஆண்டுகளாக ஸம்ஸ்கிருத மொழியைப் பரப்புவதில் முழுவதும் ஈடுபட்டுள்ள ஸம்ஸ்கிருத எஜுகேஷன் ஸொஸைடி இதனை வெளியிட்டு, பூஜ்ய ஸ்ரீ சரணர்களின் திருவடிகளில் இந்நன்னாளில் ஸமர்ப்பிக்கிறது.

மைலாப்பூர், சென்னை **S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரீ**
1-1-2004 **தலைவர்-ஸம்ஸ்கிருத வித்யாஸமிதி**

श्रीगुरुभ्यो नमः।

पुस्तकजपवटहस्ते वरदाभयचिह्नचारुबाहुलते।
कर्पूरामलदेहे वागीश्वरि शोधयाशु मम चेतः॥

# श्रीशङ्करोदन्तम्

गुरुर्ब्रह्मा गुरुर्विष्णुः गुरुर्देवो महेश्वरः।
गुरुः साक्षात्परं ब्रह्म तस्मै श्रीगुरवे नमः॥ १॥

குரு பிரும்மா, குரு விஷ்ணு, குரு தேவனான பரமசிவன். குருவே பரம்பொருள். அந்த குருவிற்கு நமஸ்காரம்.

श्रीगुरुं प्रणिपत्याहं दक्षिणामूर्तिरूपिणम्।
शङ्करोदन्तमाख्यास्ये पूर्वाचार्यैः प्रकीर्तितम्॥ २॥

நான் தக்ஷிணாமூர்த்தி வடிவமுள்ள பெருமைபெற்ற குருவை வணங்கி முற்காலத்திய பெரியோர்களால் கூறப்பட்ட சங்கராசாரியரின் வரலாற்றைச் சொல்கிறேன்.

अस्ति कैलासशिखरे दक्षिणाशामुखः शिवः।
वटाधः सनकादिभ्यो मौनेन ब्रह्म बोधयन्॥ ३॥

கைலாஸத்தின் சிகரத்தில் தெற்குதிசை நோக்கிய சிவபெருமான் ஆலமரத்தினடியில் ஸனகர் முதலானோருக்கு மௌனமாகப் பரம்பொருளைப் பற்றி விளக்கிக்கொண்டு இருக்கிறார்.

स कदाचित् करुणया त्यक्त्वा मौनं ततः प्रयान्।
सन्त्रातुं भवतापार्तान् चचार भुवि शङ्करः॥ ४॥

அவர் ஒருசமயம் கருணையால் பேசாமையைக் கைவிட்டு அங்கிருந்து கிளம்பியவராகப் பிறப்பெனும்

பிணியால் நொந்தவர்களை நன்கு காப்பாற்ற சங்கராசார்யர் வடிவில் பூமியில் சுற்றி வந்தார்.

नुमस्तमुत्तमश्लोकं शङ्करं लोकशंकरम् ।
शृणुमोऽवहितास्तस्य चरितं परमाद्भुतम् ॥ ५ ॥

அந்த பெருமைமிக்க புகழ்பெற்றவரும் உலகிற்கு நன்மை புரிகிறவருமான சங்கராசாரியரை துதிப்போம். அவரது மிகவும் வியக்கத்தக்க வரலாற்றைக் கருத்துடன் கேட்போம்.

कलिना बलिना व्याप्ते विप्लुते धार्मिके पथि ।
रुचिरे कापथे वेदविहिताचार संप्लवे ॥ ६ ॥
देवेडितः करुणया शम्भुः सगुहपद्मजः ।
सहरी रोचयामास जनिं शंकरणेच्छया ॥ ७ ॥

தர்மத்தை ஒட்டிய வழி வலிவுள்ள கலியால் ஊடுறுவப்பட்டு நலிந்தபோது, வேதம் கூறிய நன்னெறி மறைந்த போது, தீயவழி (மக்களுக்கு) மிகவும் விரும்பத் தக்கதானபோது, தேவர்களால் வேண்டப்பெற்ற சிவபெருமான் (மக்களுக்கு) நன்மைபுரியும் எண்ணத்தால் முருகன் - பிரும்மாவுடனும் விஷ்ணுவுடனும் அவதாரம் எடுப்பதை விரும்பினார்.

केरलेषु नदी ख्याता पूर्णा यत्तीरयोर्द्वयोः ।
हरेर्हरस्य सद्मानि दिव्यान्याभान्ति सर्वतः ॥ ८ ॥

எதன் கரையில் தெய்விகப் பெருமை மிக்க விஷ்ணுவுடையதும் சிவனுடையதுமான கோயில்கள் எங்கும் விளங்குகின்றனவோ. அந்த பூர்ணா (என்ற) நதி கேரளத்தில் புகழ் பெற்றது.

ऋद्धिमानुत्तरे तस्यास्तीरे विप्रगणाश्रयः ।
कालटीति महान् ग्रामः फलभारनतद्रुमः ॥ ९ ॥

அந்த நதியின் வடக்குக்கரையில் அந்தணர் கூட்டம் குடி இருப்பதும் செழிப்புள்ளதும் பழங்களின் சுமையால் தழைத்த மரங்கள் உள்ளதுமான காலடி என்ற பெரும் கிராமம் (உள்ளது).

**तमावसच्छिवगुरुः भार्ययाऽऽर्याम्बया सह।**
**निर्यात्याध्ययनैर्यज्ञैः ऋणद्वितयमादरात्॥ १०॥**

சிவகுரு (என்ற அந்தணர்,) ஆர்யாம்பா என்ற மனைவியுடன் வேதம் ஓதுதலாலும் யாகங்களாலும் இருகடன்களைக் கருத்துடன் திருப்பிக்கொடுத்து அந்த கிராமத்தில் வசித்தார். (அந்தணனுக்கு பிறந்ததும் மூன்று கடன்கள் ஏற்படுகின்றன. ருஷிக்கடன், தேவக்கடன். பித்ருக்கடன் என. வேதம் ஓதுவதால் ருஷிக்கடன் நீங்குகிறது. யாகங்கள் புரிவதால் தேவக்கடனும், நல்ல பிள்ளை பெறுவதால் பித்ருக்கடனும் நீங்குகின்றன. அவற்றில் ருஷிக்கடனையும் தேவக்கடனையும் சிவகுரு தீர்த்துவிட்டார்.)

**यातप्राये वयोमध्ये दृष्ट्वात्मानमपुत्रकम्।**
**पितॄणामनृणो नाद्यापीति खेदमवाप सः॥ ११॥**

அவர் (தன்) நடுவயது அனேகமாகக் கழிந்தபோது தான் பிள்ளை இல்லாதிருப்பவனாக உணர்ந்து இந்த வயதிலும் முன்னோர்களது கடன் தீர்த்தவனாக இல்லையே என்று மனவேதனையை அடைந்தார். (பித்ருக்கள் தனக்கு முன்னோரான தந்தை பாட்டனார் முப்பாட்டனார் ஆகியோர்.)

**भक्तवत्सलमीशानं भजावापत्यलब्धये।**
**इति पत्न्या प्रेरितस्स वृषाचलमुपागमत्॥ १२॥**

பக்தர்களிடத்தில் பரிவுள்ள பரமேச்வரனை குழந்தைப் பேற்றிற்காக பிரார்த்திப்போம் என்று மனைவியால் தூண்டப்பெற்ற அவர் விருஷாசலத்தை அடைந்தார்.

भजनं तावचरतां तत्र भक्त्या समेधितौ।
वृषाचलेशस्तावाह प्रसन्नस्तपसा तयोः ॥ १३ ॥

அவ்விருவரும் பக்தி நிரம்பியவர்களாக பஜன விரதத்தை அனுஷ்டித்தார்கள். அவர்களது தவத்தால் மகிழ்ந்த விருஷாசலநாதன் இவர்களைப் பார்த்துக் கூறினார்.

युवां वरयतं पुत्रान् बहून् मूढांश्चिरायुषः ।
सर्वज्ञमेकमथवा दिव्यमल्पायुषं सुतम् ॥ १४ ॥

''நீங்கள் இருவரும் மூடர்களும் நீண்ட ஆயுள் உள்ளவர்களுமான பல பிள்ளைகளையோ தெய்வீக சக்தியுள்ளவனும் எல்லாம் அறிந்தவனுமான அல்பாயுளுள்ள ஒரு பிள்ளையையோ தேர்ந்து எடுங்கள்'' (என்று).

पुत्रोऽस्तु नौ स सर्वज्ञः इत्यूचाते कृताञ्जली ।
सर्वज्ञस्तनयो भूयात् गृहान् यातं मुदान्वितौ ॥ १५ ॥

इत्थं शिवां शिवगिरं श्रुत्वा तौ मुदितान्तरौ ।
अयातां स्वगृहं शम्भौ समर्पितनिजेहितौ ॥ १६ ॥

''எங்களுக்கு எல்லாமறிந்தவனாக அந்தப்பிள்ளை இருக்கட்டும்'' எனக் கைகூப்பியவர்களாகச் சொன்னார்கள். ''எல்லாமறிந்த பிள்ளை உண்டாகட்டும். மகிழ்ச்சியடைந்தவர்களாக வீட்டை நோக்கிச் செல்லுங்கள்'' என்று மங்களமான பரமேச்வரரின் பேச்சைக்கேட்டு மனம் மகிழ்ந்தவர்களாக சிவபெருமானிடத்தில் தங்களது விருப்பத்தை ஒப்படைத்தவர்களாக வீட்டை நோக்கிச் சென்றார்கள்.

सा दधार सती गर्भं काले शिवमहोयुतम् ।
ववृधे शनकैस्तस्याः गर्भो रविरिवोन्मिषन् ॥ १७ ॥

அவள் உரிய காலத்தில் சிவனது மஹிமையுடன் கூடிய கருவைத்தாங்கினாள். உதிக்கும் சூரியன்போல் அந்தக்கரு சிறிதுசிறிதாக வளர்ந்தது.

षड्विंशे शतके प्राप्ते यौधिष्ठिरशकस्य च।
एकत्रिंशे नन्दनाब्दे नन्द्ये मेषङ्गते रवौ ॥ १८ ॥

वैशाखशुक्लपञ्चम्यां कर्कटे भे पुनर्वसौ।
मध्याह्नेऽभिजिति श्रीमन्मुहूर्ते सर्वमङ्गले ॥ १९ ॥

सा प्रासूत शुभे काले सुतमिन्द्रमिवादितिः।
सुलक्षणं विशालाक्षं पित्रोरानन्ददायिनम् ॥ २० ॥

*யுதிஷ்டிரசகத்தின் 26வது நூற்றுண்டு நடைபெறும்போது. அதன் முப்பத்தொன்ருவது ஆண்டான புகழ்பெற்ற நந்தன ஆண்டில் சூரியன் மேஷத்தில் ஸஞ்சரிக்கும்போது வைசாக சுக்லபக்ஷத்துப் பஞ்சமியில் கர்கடலக்கினத்தில் புனர்வஸு நக்ஷத்திரத்தில் நடுப்பகலில் அபிஜித் எனும் வேளையில் எல்லோருக்கும் மங்களம் தரும் பெருமைமிக்க முகூர்த்தத்தில் நல்ல வேளையில் அதிதி இந்திரனைப் (பிள்ளையாகப் பெற்றதைப்) போல் அவள் நல்ல லக்ஷணங்கள் உள்ளவனும் விசாலமான கண்கள் உள்ளவனும் பெற்றோருக்கு மகிழ்ச்சி தருபவனுமான பிள்ளையைப் பெற்ருள்.*

*(யுதிஷ்டிரசகம் கலிக்குமுன் 37 ஆண்டுகளுக்குமுன் நடந்த தர்ம புத்திரரின் பட்டாபிஷேகத்தைக் கொண்டாட அமைந்த காலவரை. கிருஸ்துவிற்கு 3102 ஆண்டுக்குக்கு முன் கலியுகம் தொடங்கியது. யுதிஷ்டிரசகம் தொடங்கி 2631ம் ஆண்டில், கலியுகம் தொடங்கி 2593ம் ஆண்டில், கிருஸ்துவிற்குமுன் 509 ஆண்டில் ஸ்ரீ சங்கரபவத் பாதர் தோன்றினுர் என்று ஸம்பிரதாயம் அறிந்தவர்களின் காலக்கணக்கு).*

जातं तं तनयं जातकर्मणा पूतमातनोत्।
पिता शिवगुरुस्तस्य नाम शङ्कर इत्यधात् ॥ २१ ॥

*தந்தையான சிவகுரு பிறந்துள்ள அந்த குமாரனை ஜாதகர்மா என்ற சடங்கால் தூய்மை பெற்றவராகச் செய்தார்.*

அவருக்குச் சங்கரன் என்று பெயரிட்டார். (ஜாதகர்ம — குழந்தை பிறந்ததும் தந்தை அதன் மேன்மைக்காகச் செய்ய வேண்டிய சடங்கு.)

**चन्द्रेण मूर्ध्नि नेत्रेण भाले शूलेन चांसयोः ।**
**चिह्नितं स्फटिकाभं तं गिरिशं मेनिरे जनाः ॥ २२ ॥**

தலையில் சந்திரனாலும், நெற்றியில் கண்ணாலும், தோள்களில் திரிசூலத்தாலும் அடையாளமிடப்பட்டவரும் ஸ்படிகம் போன்ற காந்தி உடையவருமான அவரை மக்கள் சிவபெருமானாக மதித்தனர்.

**अर्भको ववृधे पित्रोर्मोदेन शरदिन्दुवत् ।**
**रिङ्गन् ज्ञुभ्यां चरन् पद्भ्यां कलं सुमधुरं वदन् ॥ २३ ॥**

சிசு முழங்கால்களால் தவழ்ந்துகொண்டும், கால்களால் நடந்து கொண்டும். இனிய மழலையுடன் பேசிக்கொண்டும் சரத்காலத்துச்சந்திரனைப்போல் பெற்றோரின் மகிழ்ச்சியுடன் வளர்ந்தது. (சிசுவும் சிசுவின் அழகிய நடை முதலிய விளையாட்டைக் கண்டு பெற்றோரின் மகிழ்ச்சியும் சரத்காலத்தின் சந்திரனைப்போல் வளர்ந்து கொண்டே இருந்தன).

**भाषामवेत् ततो वर्णान् पपाठ च लिलेख च ।**
**चूडां चकारास्य पिता तृतीयेऽब्दे यथाविधि ॥ २४ ॥**

(சிசுவான சங்கரர்) மொழியை அறிந்துகொண்டார். அதன் பிறகு எழுத்தைக் கற்றுக்கொண்டார். எழுதினார். இவரது தந்தை மூன்றாவது வயதில் முறைப்படி இவருக்குச் சௌளம் செய்தார்.

**देवीं भेजे सतनयो नित्यं ग्रामान्तसंस्थिताम् ।**
**शङ्कराय ददौ शिष्टं क्षीरादेव्यै निवेदितात् ॥ २५ ॥**

(சிவகுரு) குமாரனுடன் தினமும் கிராமத்தின் எல்லையில் கோயில் கொண்டுள்ள பார்வதியை வழிபட்டு

வந்தார். தேவிக்கு நிவேதனமாக அளிக்கப்பட்ட பாலில் மீந்ததை சங்கரருக்கு அளித்து வந்தார். (காலடிக்குப் பக்கத்திலுள்ள மாணிக்கமங்கலத்தில் உள்ள காத்யாயனிதான் இந்த பார்வதிதேவி என்று சொல்கின்றனர்.)

कदाचिज्जनके याते क्वचिन्मात्रा प्रचोदितः ।
देवीमाराधयद्बालः स्वयं क्षीरं निवेदयन् ॥ २६ ॥

ஒருநாள் தந்தையான சிவகுரு எங்கோ (வெளியூர்) சென்று இருந்தபோது தாயான ஆர்யாம்பையினுல் அனுப்பப்பட்ட சிறுவர் சங்கரர், தானே பாலை நிவேதனம் செய்பவராக தேவியை வழிபட்டார்.

पिबेति प्रार्थयामास सा नागृह्णात्ततः पयः ।
रुरोद बालको देवी सन्निधायापिबत्पयः ॥ २७ ॥

(சங்கரர் பாலைக்) குடி என்று வேண்டினுர். அந்ததேவி சங்கரரிடமிருந்து பாலை ஏற்றுக்கொள்ளவில்லை. பாலனுன சங்கரர் (அதனைக்கண்டு) அழத்தொடங்கினுர். தேவி தோன்றிப் பாலைக் குடித்தாள்.

देव्या सर्वं पयः पीतं दृष्ट्वा किं वा न शेषितम् ।
मह्यं देहि पयः शिष्टं इत्यरोदीत्स बालकः ॥ २८ ॥

அந்தச் சிறுவனுன சங்கரர் தேவியால் எல்லா பாலும் குடிக்கப்பட்டதைக் கண்டு ஏன் பால் (எனக்குத் தருவதற்காக) மீதப்படுத்தவில்லை ? எனக்கு மீதமாக உள்ள பாலைத் தா என்று அழுதார்.

सा लालयन्ती तं बालमङ्कमारोप्य वत्सला ।
अपाययत्पयः स्तन्यं बालस्तेनाभवत्कविः ॥ २९ ॥

குழந்தையிடம் அன்பு மிகுந்த அந்த தேவி அந்தக் குழந்தையை மடியில் ஏற்றிக் கொஞ்சுபவளாக (தன்) முலைப்பாலை ஊட்டிவிட்டாள். அந்த பாலன் அதனுல் கவி ஆனுர்.

ततः शिवगुरुर्बालं पञ्चमेऽब्दे सुमेधसम्।
ब्रह्म संग्राहयामास ह्युपनीय यथाविधि ॥ ३० ॥

அதன் பிறகு சிவகுரு ஐந்தாவது வயதில் நல்ல அறிவாளியான சிறுவனை முறைப்படி உபநயனத்தால் தூய்மைப்படுத்தி காயத்திரி மந்திரத்தை ஏற்கச்செய்தார்.

अथैकदा शिवगुरुः समाधाय मनः शिवे।
दैवदिष्टं पदं भेजे निर्वृत्तनिखिलक्रियः ॥ ३१ ॥

அதன் பிறகு ஒருநாள் சிவகுரு சிவபெருமானிடம் மனத்தைப் பதித்து எல்லாக்கடமைகளும் தீர்ந்தவராக விதி தந்த மரணத்தை அடைந்தார்.

गते पितरि खिद्यन्त्या मात्रा नीतो गुरोः कुलम्।
अध्यैष्ट निगमान् सर्वान्, आगादस्याष्टमं वयः ॥ ३२ ॥

தந்தை மறைந்ததும் மனவேதனைப்பட்ட தாயாரால் குருவின் இருப்பிடத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டவராக எல்லா வேதங்களையும் கற்றார். அவருக்கு எட்டாவது வயது வந்தது.

भिक्षां ग्रहीतुं सवयोगणेनागात्कदाचन।
दरिद्रविप्रसदनं भिक्षां देहीत्ययाचत ॥ ३३ ॥

ஒருசமயம் தன்வயதுக்கொத்த நண்பர் கூட்டத்துடன் பிட்சை ஏற்பதற்காக ஏழை அந்தணனின் வீட்டை அடைந்தார்.

कल्याणी द्विजपत्नी सा वटुं वीक्ष्याद्भुताकृतिम्।
अदृष्ट्वा वटवे दातुमन्विच्छन्त्यपि किञ्चन ॥ ३४ ॥
एकं धात्रीफलं दीना ददौ तस्मा अवाङ्मुखी।

அந்த மங்களம் நிரம்பிய அந்தணர் மனைவி விந்தைக்குரிய வடிவுள்ள பிரும்மசாரியைக் கண்டு, பிரும்மசாரிக்குக் கொடுக்கத் தேடியும் எதனையும்

காணுதவளாக வேதனை யுற்றவளாகத் தலை குனிந்தவளாக ஒரு நெல்லிக்கனியைத் தந்தாள்.

तां दृष्ट्वाऽकिञ्चनां दीनां स निष्किञ्चनवत्सलः ॥ ३५ ॥
उपतस्थे रमां देवीं नारायणकुटुंबिनीम् ।
ततः प्रसन्नां कमलां ययाचे दययाऽऽर्द्रधीः ॥ ३६ ॥

ஒன்றுமில்லாத ஏழைகளிடம் அன்புள்ள அந்த சங்கரர் வேதனையுற்றவளும் கொடுக்க ஒன்றுமில்லாதவளுமான அவளைக்கண்டு. நாராயணனின் இல்லாளும் எல்லாம் வல்லவளுமான லக்ஷ்மியை வழிபட்டார். அதனுல் தயையால் ஈரநெஞ்சமுள்ளவராக அருள் வடிவம்கொண்ட லக்ஷ்மியை வேண்டினுர்.

विप्रपत्न्याऽऽत्मसर्वस्वं दत्तं मह्यमिदं फलम् ।
यद्यहं दयनीयोऽस्यै दद्या देवार्हसंपदः ॥ ३७ ॥

"அந்தணன் மனைவியால் தனது முழு உடமையாகிய இந்தக்கனி எனக்குத் தரப்பட்டது. நான் உனது கருணைக்குரியவனுகில், இவளுக்குத் தேவர்களுக்குகந்த செல்வங்களை அளிப்பாய்."

स्तुत्या प्रीता विदित्वाऽस्य हृद्गतं कृपया रमा ।
कनकामलकैर्वृष्टैः गेहमापूरयत्तदा ॥ ३८ ॥

துதியால் மகிழ்ந்த லக்ஷ்மீதேவி சங்கரது கருத்தை உணர்ந்து அப்போது பொழிந்த தங்க நெல்லிக்கனிகளால் வீட்டை நிரப்பினுள்.

अष्टमे हायने सर्वविद्यापारङ्गतो वटुः ।
निवृत्तोऽभूद् गुरुकुलान्मातृशुश्रूषणे रतः ॥ ३९ ॥

எட்டாவது வயதில் எல்லா கல்வித் துறைகளின் எல்லையை அடைந்த (அந்த) பிரும்மசாரியான சங்கரர் குருவின் வீட்டிலிருந்து திரும்பியவராகத் தாயின் பணிவிடையில் ஈடுபட்டவராக இருந்தார்.

नदीं विदूरगां गन्तुमक्षमां जरया प्रसूम्।
दृष्ट्वाऽऽनिन्ये नदीं पूर्णां तूर्णं निजगृहान्तिकम्॥ ४० ॥

அவர் வெகுதூரத்தில் சென்றுகொண்டிருந்த பூர்ணாநதி நோக்கி முதுமையால் செல்ல முடியாதிருந்த தாயைக்கண்டு பூர்ணாநதியை உடனேயே தனது வீட்டின் அருகாமையை அடையச்செய்தார்.

एकदा शङ्करं नद्यामवतीर्णं यदृच्छया।
तत्रागतोऽग्रहीन्नक्रो बालश्चुक्रोश मातरम्॥ ४१ ॥

ஒருசமயம் ஆற்றில் இறங்கிய சங்கரரைத் திடீரென அங்கு வந்த முதலை கவ்விற்று. பாலனான சங்கரர் தாயைக் கூவிக் கூப்பிட்டார்.

अंब ! नक्रगृहीतोऽहमायुषोऽन्तः समागतः।
गृह्णीयामाश्रमं तुर्यं जन्मान्तरमिदं मतम्॥ ४२ ॥

''தாயே ! நான் முதலையால் கவ்வப்பட்டுள்ளேன். வாழ்வின் முடிவு நெருங்கிவிட்டது. நான்காவது ஆசிரமத்தை ஏற்பேன். இது வேறு பிறவி எனக்கொள்ளப்பட்டுள்ளது.

नक्रान्मुक्तोऽथ जीवेयं यतिर्यायां पराङ्गतिम्।
इत्युक्ता सा क्षणं दध्यौ कृत्ये दोलायितान्तरा॥ ४३ ॥

முதலையிலிருந்து விடுபட்டவனானல் உயிர் பிழைப்பேன். அல்லது (விடுபடாவிடில்) சன்யாசியாகி உத்தமகதியை அடைவேன்.'' இவ்வாறு கூறப்பட்ட ஆர்யாம்பாள் சிறிது நேரம் யோசித்தாள்.

मृत्युग्रहात्सुतं त्रातुं नान्यं मार्गमविन्दत।
सन्न्यासग्रहणे पुत्रमनुमेने हितैषिणी॥ ४४ ॥

சாவின் பிடியிலிருந்து பிள்ளையைக் காப்பாற்றுவதற்கு அவள் வேறு வழியைக் காணவில்லை. இதத்தைச் செய்ய முனைந்தவளாகப் பிள்ளை ஸன்யாஸம் ஏற்க அனுமதித்தாள்.

सन्न्यस्तोऽहमिति क्रोशन् बालो नक्रादमुच्यत।
तीरं प्राप्य प्रहृष्टात्मा ननामांबापदाब्जयोः॥ ४५॥

நான் ஸன்யாஸியாகிவிட்டேன் என உரக்கச் சொல்லுகின்ற சங்கரர் முதலையிலிருந்து விடுபட்டார். கரையை அடைந்து மகிழ்ந்து தாயின் திருவடித்தாமரைகளில் வணங்கினர்.

इत एव प्रव्रजिष्ये जनन्यनुमतस्त्वया।
शाधि मामुत्तरे कृत्ये रक्षेयुस्त्वां सुहृज्जनाः॥ ४६॥

அம்மா! உங்களால் அனுமதிக்கப்பட்டவனுக நான் இங்கிருந்தே (இப்பொழுதே) துறவியாக வெளிச்செல்வேன். மேற்கொண்டு செய்யவேண்டிய விஷயத்தில் உத்தரவிடுங்கள். (உங்களிடம்) அக்கரையுள்ளவர்கள் உங்களைக் காப்பாற்றுவார்கள்.

इति प्रार्थयमानं तं कृच्छ्राल्लब्धधृतिः प्रसूः।
प्राह मद्देहपाते त्वं विदध्याः संस्कृतिं स्वयम्॥ ४७॥

மிகச்சிரமப்பட்டுத் தைரியமடைந்த அந்தத்தாய் அனுமதி கோரிநிற்கின்ற அவரைக் கேட்டுக் கொண்டாள். "என்னுடைய உடல் விழுந்ததும் நீயே ஈமச்சடங்குகளைச் செய்வாய்"

देहान्ते स्मर मां मातः समेष्यामि त्वदन्तिकम्।
विधिवत्करणीयं च करिष्ये वचनात्तव॥ ४८॥

"தாயே! உடலின் இறுதிநிலையில் என்னை நினையுங்கள். நான் தங்கள் சமீபம் வருவேன். முறைப்படி செய்ய வேண்டியதை உங்கள் சொற்படி செய்வேன்."

इत्युक्त्वा मातरं नत्वा प्रतस्थे दिशमुत्तराम्।
पूर्णातीरालयगतः कृष्णः प्रस्थितमाह तम्॥ ४९॥

இவ்வாறு கூறித் தாயைக் வணங்கி வடக்கு திசை நோக்கிக்கிளம்பினூர். கிளம்பிய அவரை பூர்ணைநதிக்கரையில் கோயில் கொண்டுள்ள ஸ்ரீ கிருஷ்ணர் கூறினூர்.

त्वया मातृहितायेयमानीता त्वद्गृहान्तिकम्।
मद्धामोर्मिकरैस्तीव्रं ताडयत्यनिशं नदी ॥ ५० ॥

உன்னூல் உன் தாயின் நன்மையை முன்னிட்டு உன் வீட்டின் அருகில் கொணரப்பெற்ற இந்த ஆறு என் இருப்பிடத்தை அலைகளாகிய கைகளால் எப்போதும் கடுமையுடன் அடித்துக்கொண்டு இருக்கிறது.

सलिलैश्चाल्यमानं मत्सदनं पतनोन्मुखम्।
तस्माद्विधाय मद्धाम्ने रक्षां, याहि स्वसिद्धये ॥ ५१ ॥

நீரின் தாக்குதலால் அசைக்கப்பட்டிருக்கின்ற என் இருப்பிடத்திற்குப் பாதுகாப்பு அளித்துவிட்டுத் தன் காரியத்தை நிறைவேற்றச் செல்வாயாக.

इतीरितस्तत्प्रतिमां अपनीयापगातटात्।
स्थिरे रम्ये प्रदेशे तं प्रत्यस्थापयदच्युतम् ॥ ५२ ॥

இவ்வாறு கூறப்பட்டவராக அந்த கிருஷ்ணரது விக்ரஹத்தை ஆற்றங்கரையிலிருந்து அப்புறப்படுத்தி, ஸ்திரமான அழகிய இடத்தில் அவரைப் பிரதிஷ்டை செய்தார்.

तस्माज्जनन्याश्च ततो लब्ध्वानुज्ञां यतान्तरः।
प्रतस्थे पथि निर्द्वन्द्वं भावयन्ब्रह्म निर्गुणम् ॥ ५३ ॥

அதன் பிறகு அந்த கிருஷ்ணரிடமிருந்தும் தாயிடமிருந்தும் அனுமதி பெற்று மனத்தை அடக்கியவராக வழியில் வேற்றுமைகள் அற்ற தூயதான பரம்பொருளை மனத்தில் தியானம் செய்துகொண்டே அவ்விடம் விட்டகன்ருர்.

गुरोश्चरणसेवार्थी गुर्वन्वेषणतत्परः।
ग्रामान्पुराणि गहनान्यतीत्य प्राप नर्मदाम् ॥ ४४ ॥

(சங்கரர்) குருவின் திருவடிகளில் பணிவிடை செய்யும் நோக்கம் உள்ளவராக, குருவை நாடுவதில் முனைந்தவராக கிராமங்களையும் நகரங்களையும் காடுகளையும் தாண்டி நர்மதை ஆற்றை அடைந்தார்.

पुरा चिदंबरेशस्य प्रदोषनटनाद्भुतम् ।
द्रष्टुमभ्यागतः कश्चित्पाणिनिर्नाम तापसः ॥ ५५ ॥

முன்னர் ஒருநாள் சிதம்பரத்து ஈசனாகிய நடராஜப் பெருமானின் நடனமெனும் விந்தையைக் காண்பதற்காக பாணினி என்றமுனிவர் வந்தார்.

स चक्रे नृत्यतस्तस्य ढक्कानादविजम्भितैः ।
वर्णजालैः पदाभिख्यशास्त्रसूत्राणि बुद्धिमान् ॥ ५६ ॥

மிகச்சிறந்த அறிவாளியான அந்த பாணினி நர்த்தனம் செய்கின்ற அந்த நடராஜப் பெருமானின் உடுக்கின் ஒலியிலிருந்து வெளியான எழுத்துக் கூட்டங்களைக் கொண்டு பத சாஸ்திரம் என்ற இலக்கண நூலுக்கான ஸூத்திரங்களை எழுதினார்.

अथान्यस्तत्सहाध्यायी नाम्ना वररुचिर्मुनिः ।
वार्तिकान्याह सूत्रार्थं विवरीतुं महामतिः ॥ ५७ ॥

மேலும் பாணினியுடன் இலக்கணம் கற்றவரான மற்றொரு முனிவர் பெரும் அறிவாளி வரருசி என்பவர், ஸூத்திரங்களின் பொருளை விளக்குவதற்காக வார்த்திகங்களைச் செய்தார். (சொன்னதையும் சொல்லாததையும் தவறானவைகளையும் பற்றித் தெளிவு படுத்துபவை வார்த்திகங்கள்).

विष्णोर्हि शयनं शम्भोर्नूपुरं च महीधरः ।
शेषः पतञ्जलिरभूत् दिदृक्षुः स सभानटम् ॥ ५८ ॥

भुवं गतः तपस्विन्या गोणीनाम्न्याः स सर्पराट् ।
सुतार्थिन्याः सवित्रेऽर्घ्यमर्पयन्त्याः कराञ्जलेः ॥ ५९ ॥

अपतत्सुन्दरवपुः बालकः सातिविस्मिता।
सन्तुष्टा सस्वजे बालं स बभूव पतञ्जलिः ॥ ६० ॥

*விஷ்ணுவின் படுக்கையும் சிவபெருமானின் காலணியும் பூமியைத் தாங்குபவரும் ஸர்பங்களின் அரசனுமான ஆதிசேஷன் சபையில் ஆடும் நடராஜப் பெருமானை (கூத்தர் பெருமானை)ப் பார்க்க விரும்பியவராகப் பூமியை அடைந்து பிள்ளை வேண்டித் தவமியற்றுகின்ற கோணீ என்பவள் ஸூர்யனுக்கு அர்க்யம் கொடுக்கும்போது அவளது அஞ்சலியிலிருந்தும் அழகிய சிசுவாக கீழே விழுந்தார். விந்தையால் ஆட்பட்ட அவள் அந்தக் குழந்தையை வாரி அணைத்தாள். அவர் பதஞ்சலியானார்.*

चिदम्बरे नटेशानं दृष्ट्वा सिद्धोऽभवन्मुनिः।
पतञ्जलिं करुणया स्वयं देवः समादिशत् ॥ ६१ ॥

भाष्यं पाणिनिसूत्राणां विधातुं वार्तिकोपरि।
पतञ्जलिः पाणिनीयसूत्राणां भाष्यमातनोत् ॥ ६२ ॥

*சிதம்பரத்தில் நடராஜரைக் கண்டு முனிவர் ஸித்திபெற்றவரானார். ஈசன் தானே பதஞ்ஜலியைக் கருணையால் பாணினியின் ஸூத்திரங்களுக்கான வார்திகத்தின்மேல் பாஷ்யம் எழுத உத்தரவிட்டார். பதஞ்ஜலி பாணினியின் ஸூத்ரங்களுக்குப் பாஷ்யம் எழுதினார்.*

स्वर्णरङ्गे महाभाष्यमुपदेष्टुमना मुनिः।
शिष्यान्प्रतीक्षमाणोऽभून्नटेशेक्षणनिर्वृतः ॥ ६३ ॥

*தங்கத்தாலான நடன அரங்கில் முனிவரான பதஞ்சலி நடராஜப் பெருமானைக் கண்டதால் மனநிறைவு கொண்டவராக மஹாபாஷ்யத்தைப் போதிக்க விரும்பியவராக சீடர்களை எதிர்பார்த்து இருந்தார்.*

कदाचिदागतान् शिष्यान् स सहस्रं ततस्ततः।
वक्तुं प्रववृते भाष्यं सहस्रस्तम्भमण्डपे ॥ ६४ ॥

ஒரு சமயம், ஆங்காங்கிருந்து வந்து கூடிய ஆயிரக்கணக்கான மாணவர்களுக்கு ஆயிரக்கால் மண்டபத்தில் பாஷ்யத்தை போதிக்கத் தொடங்கினார்.

मध्ये जवनिका काचित् लम्बिता गुर्वधीतिनाम् ।
नान्येन संलपेत्कश्चित् नापगच्छेद्बहिः क्वचित् ॥ ६५ ॥

नोत्क्षिपेद्वा जवनिकां सर्वोऽप्यवहितो भवेत् ।
इत्यादिश्य च्छात्रवर्गं भाष्यं गुरुरुपादिशत् ॥ ६६ ॥

குருவிற்கும் மாணவர்களுக்கும் இடையே ஒரு திரை தொங்கவிடப்பட்டது. ''எவரும் மற்றவருடன் பேசக்கூடாது. வெளியே எங்கும் செல்லக்கூடாது. திரையையும் தூக்கக்கூடாது. எல்லோரும் கவனத்துடன் இருக்கவேண்டும். என்று உத்தரவிட்டுவிட்டு மாணவர் வகுப்பிற்கு குரு பாஷ்யத்தை போதித்தார்.

अष्टौ दिनान्यतीतानि नवमेऽह्नि किमप्यभूत् ।
गौडदेशागतः कश्चित्पाठमध्ये बहिर्ययौ ॥ ६७ ॥

எட்டு நாட்கள் சென்றன. ஒன்பதாவது நாளில் ஏதோ (எதிர்பாராதது) நடந்தது. கௌடதேசத்திலிருந்து (கிழக்கு வங்கம் - ஒரிஸ்ஸாவின் இடையிலுள்ளது) வந்த ஒருவன் பாடத்தின் இடையே வெளியே சென்றான்.

उदक्षिपज्जवनिकां शिष्यः कश्चन कौतुकात् ।
सर्वेऽपश्यन्भीमरूपं स्वगुरुं शेषरूपिणम् ॥ ६८ ॥

ஒரு சிஷ்யன் குறுகுறுப்பால் திரையைத் தூக்கினான். எல்லோரும் பயங்கர வடிவம் கொண்ட ஆதிசேஷன் உருவிலிருந்த தம் குருவைக் கண்டனர்.

क्षणाद्विषाग्निना दग्धान् दृष्ट्वा स्वं रूपमास्थितः ।
शशाप गौडमायान्तं ब्रह्मरक्षो भवेति सः ॥ ६९ ॥

அந்த பதஞ்சலி, நொடியில் விஷத்தீயால் எரிக்கப்பட்ட அவர்களைக் கண்டு தன் வடிவைப ஏற்றவராக தன்னை நோக்கி வருகின்ற கௌடதேசத்திலிருந்து வந்த மாணவனை பிரும்மராக்ஷஸனாக ஆவாய் எனச் சபித்தார்.

शिष्यनाशानुतप्तोऽथ गौडमाहूय सादरम् ।
मदनुग्रहतो भातु महाभाष्यं तवान्तरे ।। ७० ।।

वत्स मागा विषादं त्वं शिष्यस्ते भवितोत्तमः ।
तस्मै मत्कृतिमध्याप्य शापान्मुक्तो भवेत्यशात् ।। ७१ ।।

(கௌடனைத்தவிர) மற்ற மாணவர்களின் அழிவால் மனம் வருந்தியவராக ஆதரவுடன் கௌடனை அழைத்து "உன் அறிவில் என் அருளால் மஹா பாஷ்யம் நன்கு தெளிவாகப் புரியட்டும். குழந்தாய் ! கலங்காதே ! உனக்கு நல்ல சீடன் ஏற்படுவான். அவனுக்கு என் நூலைப் போதித்துப் பின் சாபத்திலிருந்து விடுபடுவாய்" என் ஆணையிட்டார்.

इत्थं गुरोः प्राप्य वरं गौडो रक्षोवपुर्धरः ।
रेवातटे वटेऽवात्सीत् सच्छिष्यावेक्षणोन्मुखः ।। ७२ ।।

இப்படி கௌடர் குருவிடமிருந்து அருள்வாக்கு பெற்று பிரும்மராக்ஷஸ வடிவமேற்றவராக நர்மதை நதிக்கரையில் நல்லதொரு சீடனை எதிர்பார்ப்பதிலேயே முனைந்தவராக ஆலமரத்தில் தங்கி இருந்தார்.

उज्जयिन्याश्चन्द्रशर्माभिधो विप्रवटुस्तदा ।
अहीश्वरमहाभाष्यमध्येतुं दक्षिणानगात् ।। ७३ ।।

உஜ்ஜயினியிலிருந்து சந்திரசர்மா என்ற பெயருள்ள ஒரு அந்தணச் சிறுவன் அப்போது பாம்பரசனான பதஞ்ஜலியின் மஹா பாஷ்யத்தைக் கற்பதற்காகத் தென்னாட்டை அடைந்தான்.

शापार्तं गौडमुद्धर्तुं स्वयं चन्द्रवपुर्धरः ।
पतञ्जलिः समायात इति प्राहुः पुराविदः ।। ७४ ।।

முன்னாள் சரித்திரமறிந்தவர்கள் சாபத்தால் வாடிய கௌடரைக் கரையேற்றுவதற்காகப் பதஞ்ஜலி சந்திரசர்மாவின் உடல் தாங்கியவராக வந்தார் எனக் கூறுவர்.

**निष्ठारूपं पचेर्ब्रूया इति पृष्टः स रक्षसा।**
**पक्वमित्याह तेनासौ नीतस्तुष्टेन शिष्यताम्॥ ७५॥**

பச் என்ற வினைப்பகுதியின் இறந்தகால வினையெச்சம் சேர்ந்த உருவம் சொல்வாய் என அந்த பிரும்மராக்ஷஸனால் கேட்கப் பெற்ற அந்த சந்திரசர்மா 'பக்வம்' எனக் கூறினார். மகிழ்ச்சியுற்ற அந்த பிரும்மராக்ஷஸனால் சிஷ்யராக்கப்பட்டார்.

**अध्याप्य तं महाभाष्यं त्यक्त्वा रक्षोवपुस्ततः।**
**गौड आशास्य शिष्यं तं प्रतस्थे दिशमुत्तराम्॥ ७६॥**

பிறகு அந்த சந்திரசர்மாவிற்கு மஹாபாஷ்யத்தைப் போதித்து விட்டு பிரும்மராக்ஷஸவடிவை விட்டு, அந்த சிஷ்யனை வாழ்த்திவிட்டு கௌடர் வடக்கு நோக்கிச் சென்றார்.

**तुरीयाश्रममासाद्य गौडो योगीश्वराच्छुकात्।**
**ब्रह्मविद्यामधिजगे बदरीमध्युवास च॥ ७७॥**

கௌடர் யோகிகளில் சிறந்த சுகரிடமிருந்து நான்காவது ஸன்யாஸமெனும் ஆசிரமத்தை ஏற்று, பரம்பொருளைப்பற்றிய கல்வியைப் பயின்றார். பதரியில் வசித்தார்.

**चन्द्रः श्रान्तश्चिराधीतैः निद्रया मोहमेयिवान्।**
**तं काचिज्जीवयामास नवनीतेन कन्यका॥ ७८॥**

சந்திரசர்மா வெகுநாட்கள் தொடர்ந்து கற்றதனால் களைப்பு அடைந்தவராகத் தூக்கத்தால் மயக்கமுற்றார். ஒருபெண் அவரை வெண்ணெய்ப்பூச்சால் தெளிவித்தாள்.

**उवाह तां स तिस्रोऽन्याः कन्या वैदुष्यमोहिताः।**
**चत्वारस्तनया जाताः सर्वे विद्याविदोऽभवन्॥ ७९॥**

அந்த சந்திரசர்மா அந்தப்பெண்ணையும் (அவரது) கல்விச் சிறப்பில் மயங்கிய மூன்று வேறு பெண்களையும் மணந்தார். நான்கு பிள்ளைகள் பிறந்தார்கள். எல்லோரும் சிறந்த கல்விமான்களாக ஆனார்கள்.

निवृत्तोऽभ्यगमद्गौडं स्वगुरुं बदरीस्थितम्।
प्राप तुर्याश्रमं तस्य प्रसादाद्ब्रह्मभावदम्॥ ८० ॥

பற்றற்றவராக சந்திரசர்மா பதரியிலிருந்த தன்குருவான கௌடபாதரைச் சென்றடைந்தார். அவரது அருளால் ஆத்மஞானத்தைத் தரவல்ல நான்காம் ஆசிரமத்தைப் பெற்றார்.

सततं जय गोविन्द पाहि गोविन्द मामिति।
निगदन्नन्यतो मौनी गोविन्दाख्यामवाप सः॥ ८१ ॥

அந்த சந்திரசர்மா எப்போதும் ''கோவிந்தா வாழி ! கோவிந்தா காப்பாற்று !'' என்றே சொல்பவராக வேறு பேச்சற்றவராக இருந்து கோவிந்தர் என்ற சிறப்புப் பெயரைப் பெற்றார்.

व्यासादेशाच्छङ्करार्यमुपदेष्टुं त्रयीशिरः।
प्रतीक्षमाणस्तं योगी रेवातीरेऽवसत्सुखम्॥ ८२ ॥

கோவிந்தர் (கோவிந்த பகவத்பாதர் என்பர்) வியாஸரது ஆணையால் சங்கரருக்கு உபநிடதங்களை உபதேசிப்பதற்காக அவரை எதிர்பார்ப்பவராக யோகநிலையில் அமர்ந்தவராக நர்மதி ஆற்றங்கரையில் சுகமாக இருந்தார்.

गोविन्द पूज्यपादं तं अन्विच्छन् शङ्करो गुरुम्।
तदध्युष्टगुहां प्राप्य विनीतः प्रणनाम तम्॥ ८३ ॥

சங்கரர் குருவான அந்த கோவிந்த பகவத் பாதரைத் தேடுபவராக அவர் குடியிருக்கும் குகையை அடைந்து அடக்கத்துடன் அவரை வணங்கினார்.

"स विष्णोः शयनं, दध्रे महीं, शम्भोश्च नूपुरम्।
पतञ्जलिः स एवाभूत्, स एवैष गुरूत्तमः ॥ ८४ ॥

அந்த ஆதிசேஷன் விஷ்ணுவின் படுக்கையாக இருந்தார். பூமியை அனந்தனுகத் தாங்கினூர். பரமசிவனுக்குக் கால்கழல்கள் ஆனூர். அவரே பதஞ்சலி ஆனூர். அவரே இதோ குருவரராக இருக்கிறூர்.

सर्ववेदान्तसिद्धान्तगोचरं तमगोचरम्।
गोविन्दं परमानन्दं सद्गुरुं प्रणतोऽस्म्यहम्॥ ८५ ॥"

எல்லா உபநிடத ஸித்தாந்தத்தில் மனம் சென்றுகொண்டிருப்பவரும், பேராநந்த வடிவினரும் நல்ல குருவுமான கோவிந்தரை வணங்குகிறேன்.

इति स्तुवन्तं तं भक्तं समाधेरुत्थितो गुरुः।
पप्रच्छ प्रणतं कस्त्वमिति वाचा दयामुचा॥ ८६ ॥

இப்படித் துதித்து வணங்கி நிற்கின்ற அந்த பக்தனை ஸமாதியில் இருந்து எழுந்த அந்த குரு, யார் நீ என்று தயை சொரிகின்ற வாக்கால் கேட்டார்.

न भूमिरापस्तेजो वा वायुः खं नेन्द्रियाणि च।
न तद्गणः सुषुप्त्येकसिद्धोऽहं केवलः शिवः ॥ ८७ ॥

நான் பூமியோ, நீரோ, நெருப்போ, காற்ரூ, ஆகாயமோ, இந்திரியங்களோ அல்ல. அவைகளின் தொகுப்பும் அல்ல. நல்ல தூக்கத்தில் தனித்திருப்பவனுகக் கண்டசிவனுன ஆத்மஸ்வரூபமாக இருக்கிறேன்.

आकर्ण्य शङ्करवचः सिद्धब्रह्मप्रदर्शनम्।
शङ्करः शङ्करः साक्षादित्यजानात्समाधिना॥ ८८ ॥

எப்போதும் நிலைத்துள்ள பரம்பொருளை விளக்குகின்ற சங்கரரது வார்த்தையைக்கேட்டு ஸமாதியில் நின்று பார்ப்பதன் மூலம் இந்த சிறுவர் சிவபெருமானே என்று உணர்ந்தார்.

अर्हं पारमहंस्याय धृत्या शान्त्या बुभुत्सया।
विदित्वा दीक्षितं चक्रे संन्यासविधिना गुरुः ॥ ८९ ॥

*நிலைத்த பகுத்தறிவாலும் மனவடக்கத்தாலும் பரம்பொருளைப் பற்றி அறியும் பேராவலாலும் ஸன்யாஸமேற்பதற்கு ஏற்றவராக உணர்ந்து குருவான கோவிந்தர் ஸன்யாஸ முறைப்படி சங்கரரை விரதமேற்றவராகச் செய்தார்.*

ततो विहितसंन्यासः शङ्करो जगृहे गुरोः।
सर्वं यतिवरैर्ग्राह्यमुपदेशं महत्तरम् ॥ ९० ॥

*அதன் பிறகு ஸன்யாஸம் ஏற்ற சங்கரர் குருவிடமிருந்து சிறந்த ஸன்யாசிகளால் ஏற்கத்தக்க எல்லா உபதேசங்களையும் ஏற்றார்.*

कृष्णद्वैपायनाचार्यकृतसूत्रानुसारतः।
अध्यैष्टोपनिषद्वृन्दतत्त्वं तस्माद्यथाविधि ॥ ९१ ॥

*அவரிடமிருந்து கிருஷ்ணத்வைபாயனர் என்ற வியாஸர் செய்த ஸூத்திரங்களை ஒட்டி, உபநிடதக் கூட்டங்களின் சாரத்தைக் கற்றார்.*

अवेदीद्ब्रह्मतां स्वस्मिन्नाचार्यवचसा क्रमात्।
तत्त्वमस्यादिभिर्वाक्यैः अपेतद्वैतभावनः ॥ ९२ ॥

*கிரமமாக ஆசாரியரான கோவிந்த பகவத் பாதரின் உபதேசத்தால் தத்வமஸி முதலிய வாக்கியங்களின் மூலம் நான் எனது என்ற வேற்றுமை உணர்ச்சிகள் அகன்றவராகத் தான் எங்கும் நிரம்பியுள்ள பரம்பொருளாக இருக்கும் நிலையை உணர்ந்தார்.*

श्रीगुरोरर्चयन्नङ्घ्री वसन्निन्दुभवातटे।
वार्षिकांश्चतुरो मासान्नीतवान् ध्यानयोगतः ॥ ९३ ॥

சிறந்த தனது ஆசாரியரின் திருவடிகளை வழிபடுபவராக நர்மதையின் கரையில் மழை நாட்களான நான்கு மாதங்களை தியானத்தில் ஈடுபாட்டுடன் கழித்தார்.

वर्षासु नर्मदापूरो घोरो वार्धिरिवाययौ ।
उत्खातयंस्तटरुहान्मज्जयंश्चाश्रमोटजान् ॥ ९४ ॥

மழைநாளில் நர்மதையின் பெருக்கு பயங்கரமாகக் கரையில் முளைத்த மரம் முதலியவற்றைப் பெயர்த்துக் கொண்டும் ஆசிரமத்தின் குடிசைகளை மூழ்கடித்துக் கொண்டும் கடல்போல் வந்தது.

गुरौ समाधिगे स्तब्धजनदुःखापनुत्तये ।
वेगनिग्रहणायासौ प्रार्थयामास नर्मदाम् ॥ ९५ ॥

குரு ஸமாதியில் ஆழ்ந்திருந்தபோது செய்வதறியாது திகைத்த மக்களின் துயரம் நீங்குவதற்காக நர்மதையைத் தன் பெருக்கின் சீற்றத்தை அடக்கிக்கொள்ள வேண்டினார்.

प्रसन्ना नर्मदा वेगं निजग्राह यथार्थितम् ।
प्रविशन्ती शङ्करेण गृहीतं तत्कमण्डलुम् ॥ ९६ ॥

(துதியால்) அருள் புரிபவளாக நர்மதை வேண்டியவாறு சங்கரர் ஏந்தியிருந்த கமண்டலுவின் உள் நுழைந்தவளாகத் தன் சீற்றத்தை அடக்கிக்கொண்டாள்.

समाधेरुत्थितो योगी गोविन्दस्तं जगाद ह ।
ब्रह्मसूत्रकृतं व्यासं भगवन्तं कदाचन ॥ ९७ ॥
विनीतोऽहं पर्यपृच्छं मुनीनामथ सन्निधौ ।

ஸமாதியிலிருந்து வெளிப்பட்ட யோகியான கோவிந்தர் அவரை(ப்பார்த்து) சொன்னார். ''ஒருநாள் முனிவர்களது முன்னிலையில் வணக்கத்துடன் கைகூப்பியவனாக நான் பிரும்ம ஸூத்ரங்களை எழுதிய பெருமானான வியாஸரைக் கேட்டேன்.

''सूत्रिता ब्रह्ममीमांसा श्रुतिशीर्षपथानुगा ॥ ९८ ॥
लघ्वक्षरत्वात्सूत्राणां विवृतिः काप्यपेक्ष्यते ।
यथार्थग्रहणायैषां विवृतिं कृपया कुरु'' ॥ ९९ ॥

''உபநிடதங்களை அனுசரித்து ஆத்மதத்வ விசாரணைக்கான வழிமுறை ஸூத்ர வடிவில் அமைக்கப்பட்டுள்ளது. ஸூத்ரங்கள் சொல் சிக்கனம் உள்ளபடியால் அதற்கு ஒரு விரிவுரை தேவைப்படுகிறது. அவற்றை நன்கு புரிந்து கொள்ள ஒரு விளக்கவுரையை எழுதுங்கள்'' என்று.

व्यासस्तदाऽऽह मां 'वत्स शिष्यस्ते भविताऽनघ ।
महोग्रवेगां सरितं कुम्भे यः संग्रहीष्यति ॥ १०० ॥

வியாஸர் அப்போது என்னை(ப்பார்த்து)ச் சொன்னார். தோஷ மற்ற குழந்தாய் ! மிகவும் கடும் வேகமுள்ள ஆற்றை எவன் (தனது) கலசத்தினுள் அடக்கிக்கொள்வானோ அத்தகைய சீடன் ஒருவன் உனக்கு ஏற்படுவான்.

दुर्मतानि निरस्यासौ सूत्रभाष्यं करिष्यति ।''
इत्यादिशत्स मुनिराट् स च काल उपागतः ॥ १०१ ॥

இந்தச்சீடன் நல்வழி காட்டாத மதங்களை வென்று ஸூத்ர பாஷ்யம் இயற்றுவார்'' என்று அந்த முனிவரரசர் உத்திரவிட்டார். அந்த நேரம் நெருங்கியுள்ளது.

सौम्य शङ्कर भद्रं ते शृणुष्व गदतो मम ।
नारायणः पद्मभवो वसिष्ठः शक्तिरेव च ॥ १०२ ॥

मुनिः पराशरो व्यासः कृष्णद्वैपायनः शुकः ।
शुकशिष्या गौडपादाः एषा गुरुपरंपरा ॥ १०३ ॥

நல்லோனே சங்கரா ! உனக்கு மங்களம் உண்டாகட்டும். என்சொல்லைக் கேள். நாராயணன், தாமரையில் தோன்றிய பிரும்மா, வஸிஷ்டர், சக்தி, பராசரமுனிவர், வியாஸர், சுகர்,

சுகரின் சீடரான கௌடபாதர் அவர்கள், இது (நமது) குருபரம்பரை.

गुरुक्रमागतां ब्रह्मविद्यां बदरिकावने।
अध्यगां गौडपादेभ्यः तेषां अन्तेवसन्मुदा॥ १०४॥

பதரீவநம் என்ற இலந்தைக் காட்டில் ஸ்ரீ கௌடபாதர்களிடமிருந்து அவர்களருகில் வசிக்கிற சீடனாகி குரு பரம்பரையில் வந்த பிரும்மவித்யையைக் கற்றேன்.

तां त्वयि प्रतिपाद्याहं कृतार्थः शृणु मे वचः।
गच्छ वाराणसीं भद्र शिष्यांस्तत्राधिकारिणः॥ १०५॥

बोधय ब्रह्मविज्ञानं भाष्येण विशदीकृतम्।
अनुगृह्णातु तत्र त्वां देवो वाराणसीपतिः॥ १०६॥

நல்லவனே! நான் அந்த பிரும்மவித்யையை உன்னிடம் சேர்ப்பித்து கடமையை முடித்தவனானேன். என் சொல்லைக் கேள். காசிக்குச் செல், அங்கு தக்க சீடர்களுக்கு உனது பாஷ்யத்தால் விளக்கப்பெற்ற ஆத்மதத்வம் பற்றிய சாஸ்திரத்தை உபதேசிப்பாய். காசீபதியான தேவன் சிவன் உனக்கு அருள் புரியட்டும்.

इत्थमाशास्य शिष्यं तं गोविन्दो बदरीं ययौ।
दिदृक्षुः स्वगुरुं गौडं कृतार्थेनान्तरात्मना॥ १०७॥

இவ்வாறு அந்த சீடனை வாழ்த்திவிட்டு கோவிந்தபகவத் பாதர், தன் எதிர்பார்ப்பு நிறைவுற்ற மனத்துடன், தன் குருவான கௌடபாதரைக் காண விரும்பியவராக பதரியை அடைந்தார்.

स्वगुरोरभिवन्द्याङ्घ्रिं ययौ काशीं स शङ्करः।
श्रुतिशीर्षविचारेण कालं तत्रानयच्छुभम्॥ १०८॥

அந்த சங்கரர் தன் குருவின் திருவடியை வணங்கிக் காசியை அடைந்தார். வேதங்களின் தலைப்பகுதியான

உபநிடதங்களின் பொருளைப்பற்றி ஆராய்வதில் அங்கு நேரத்தை மங்களமாகக் கழித்தார்.

बालः कश्चिच्चोलदेश्यो वेदवित्प्रथमाश्रमी।
महद्दिदृक्षया देशानटन् शङ्करमाश्रयत्। १०९॥

சோழ தேசத்தைச் சார்ந்தவனும், முதலாவதான பிரும்மசரிய ஆசிரமத்தில் இருப்பவனும் வேதம் அறிந்தவனுமான ஒரு சிறுவன் பெரியோர்களைக் காணும் விருப்பத்தால், தேசத்தைச்சுற்றி வருபவனாக சங்கரரை அணுகினான்.

विज्ञायार्हं संन्यसने शङ्करस्तं यतिं व्यधात्।
तं प्राहुरादिमं शिष्यं सनन्दनसमाख्यया॥ ११०॥

சங்கரர் அவரை ஸந்நியாஸத்திற்குத் தக்கவராக அறிந்து ஸந்நியாஸியாக ஆக்கினார். அவரை (மக்கள்) ஸநந்தனர் என்ற பெயருள்ள முதலாவது சிஷ்யனாகக் கூறுகிறார்கள்.

कदाचित्सहितः शिष्यैः आगच्छन् जाह्नवीतटात्।
मध्येऽन्त्यजमपश्यत्सापत्यदारं श्वभिर्वृतम्॥ १११॥

ஒரு சமயம் சிஷ்யர்களுடன் கூட கங்கைக்கரையிலிருந்து திரும்பி வருபவராக, நடுவில் புதல்வர்களுடனும் மனைவியுடனும் கூடியவனும் நாய்களால் சூழப்பட்டவனுமான சண்டாளனைக் கண்டார்.

पानान्मत्तं तमालोक्य गच्छ गच्छेत्यशाद्यतिः।
स एनमाह भो विप्र कं दूरीकर्तुमिच्छसि॥ ११२॥
चेतनाच्चेतनं वाऽन्नमयादन्नमयं बुध।

மதுவருந்தியதால் சுய நினைவிழந்த அவனை பார்த்து ஸந்யாஸி (சங்கரர்) (அப்பால்) செல் செல் என்று கூறினார். அவன் இவரை(ப்பார்த்து) கூறினான்- ''அந்தணரே ! அறிவாளியே ! எதை அப்பாற்படுத்த விரும்புகிறீர் ?

உணர்வாயுள்ளதிலிருந்து உணர்வாயுள்ளதையா அல்லது உணவாலானதிலிருந்து உணவாலானதையா ?

श्वपचोऽयमहं विप्र इति कोऽयं भिदाभ्रमः ॥ ११३ ॥

गङ्गाजले पङ्कजले बिंबितस्याहिमद्युतेः ।
को भेदः स्वर्णमृत्पात्रमध्यगस्यांबरस्य च ॥ ११४ ॥

இவன் நாயை வேகவிடுபவன், நான் அந்தணன் என்ற வேறுபாடு காண்கின்ற பிரமை எதனுல் ? கங்கை நீரிலும் சேற்று நீரிலும் பிரதிபிம்பமாகத் தெரிகின்ற சூர்யனுக்கும், தங்கப்பாத்திரத்திலும் மட்பாத்திரத்திலும் உள்ளே உள்ள ஆகாயத்திற்கும் இடையே என்ன வேற்றுமை ?

अशरीरः शरीरेषु पूर्ण एको हि विद्यते ।
विमुक्तिपद्यामाप्यापि मोह एवं कुतस्तव ॥ ११५ ॥

(ஆத்மா) ஒருவனே உடலற்றவனுக எல்லா உடல்களிலும் நிரம்பியவனுக இருக்கிருன். மோக்ஷ வழியை அடைந்தும் உனக்கு ஏன் இந்த மயக்கம் ?

इत्यप्रतीक्षितां वाचं निशम्य श्वपचोदिताम् ।
विस्मितः प्राह तनुभृत्प्रवरात्थ यथायथम् ॥ ११६ ॥

இவ்வாறு சண்டாளனிடமிருந்து வந்த எதிர்பார்த்திராத பேச்சைக் கேட்டு வியந்தவராகக் கூறிஞர் - ''உடல் தாங்குபவரில் (மனிதருள்) சிறந்தவனே ! உள்ளது உள்ளபடி கூறுகிருய் !

या साक्षिणी स्फुटा संवित् जाग्रत्स्वप्नसुषुप्तिषु ।
सैवाहं न तु यद्दृश्यं इति जानन् स मे गुरुः ॥ ११७ ॥

விழிப்பிலும் கனவிலும் தூக்கத்திலும் நன்கு விளங்குகின்ற பேரறிவாக ஸாக்ஷியாக எது உள்ளதோ அதுவே நான். எது புலப்படுகிறதோ அது அல்ல என்று அறிகின்ற அவன் எனக்கு குரு.

ब्रह्मैवाहमिदं सर्वं कल्पितं तदविद्यया।
विततं ज्ञातवान्विप्रः चाण्डालो वा गुरुर्मम॥ ११८॥

நான் பரம்பொருளே. இதோ (தெரிவது) அனைத்தும் இதனை (பரம்பொருளை) அறியாதிருப்பதால் கல்பனையால் தோற்றுவிக்கப்பட்டது. எங்கும் பரவியுள்ளது. இதனை அறிந்தவன் அந்தணனே, சண்டாளனே (அவன்) எனக்கு குரு.

एवं वदन् ददर्शाग्रे सुताभ्यामुमया सह।
स्वपरीक्षार्थमायातं त्यक्तान्त्यजतनुं शिवम्॥ ११९॥

இவ்வாறு கூறிக்கொண்டே சங்கரர் தன்முன் சண்டாள உடலை விட்டவரும் (தன்) இரு குமாரர்களுடனும் உமையுடனும் தன்னைச் சோதிக்க வந்தவருமான சிவனைக் கண்டார்.

स्तुवन्तं तं नतं प्राह श्लाघयंस्तद्वचः शिवः।
विदितश्रुतिशीर्षोऽसि कुरूपनिषदां तथा॥ १२०॥

व्यासप्रणीतसूत्राणां भाष्यं युक्तिपुरस्कृतम्।
निरस्य दुर्मतानीति समादिश्य तिरोदधे॥ १२१॥

சிவபெருமான் அவரது சொல்லைக் கொண்டாடிவிட்டு, வணங்கி எழுந்து துதிக்கும் அவரைப் பார்த்து கூறினர் - "நீ வேத முடிவான உபனிடதங்களை அறிந்தவனாக இருக்கிறாய். கெட்ட கொள்கைகளைக் கண்டித்து, உபனிடதங்களுக்கும் வியாஸர் எழுதிய பிரும்மஸூத்திரங்களுக்கும் யுக்திகளை முன்னிட்ட பேருரையைச் செய்வாயாக" இவ்வாறு உத்திரவிட்டு மறைந்தார்.

अधिगम्य स विश्वेशानुग्रहं भाष्यनिर्मितौ।
स्थितं बदर्यां गोविन्दपूज्यपादमुपागमत्॥ १२२॥

*அவர் (சங்கரர்) பாஷ்யத்தை உருவாக்குவதற்கு விச்வேச்வரரின் அருளைப்பெற்று பதரியில் இருந்த கோவிந்த பூஜ்யபாதரை அடைந்தார்.*

**तद्दिष्टस्तद्गुरुं गौडं गुहासंस्थं प्रणम्य सः।**
**कुर्वंस्तयोर्वरीवस्यां तापसैः सममावसत्॥ १२३॥**

*அவரால் (கோவிந்தரால்) வழிகாட்டப்பெற்ற அவர் (சங்கரர்) அவரது (கோவிந்தரின்) குருவான, குகையில் சமாதியில் இருந்த கௌடபாதரை வணங்கி அவ்விருவருக்கும் பணிவிடையைச் செய்பவராக தவமியற்றுபவர்களுடன் கூட வசித்தார்.*

**व्यासतात्पर्यभरितं श्रुतिशीर्षण्यदर्शनम्।**
**गोविन्दाभ्यर्थितो गौडः तस्मा उपदिदेश ह॥ १२४॥**

*கோவிந்த பகவத்பாதரால் வேண்டப்பெற்ற கௌடபாதர் வியாசரது கருத்துக்கள் நிரம்பிய வேதாந்த தரிசனத்தை அவருக்கு (சங்கரருக்கு) உபதேசித்தார்.*

**आदिष्टो गौडपादेन प्रस्थानत्रितये तदा।**
**निर्ममे शङ्करो भाष्यं गुर्वोः प्रीतिं समावहन्॥ १२५॥**

*கௌடபாதரால் கட்டளையிடப்பெற்ற சங்கரர் குருக்களின் (கௌடபாதர், கோவிந்தபகவத்பாதர் இவரிருவரின்) மகிழ்ச்சியைக் கொண்டுவருபவராக (வேதாந்தத்தின்) மூன்று துறைகளிலும் பொருள் விளக்கம் தரும் பாஷ்யத்தை இயற்றினார்.*

**गौडपादस्ततः प्रीतः प्रशिष्यं भाष्यकारिणम्।**
**लोकशङ्करणे शक्तं समाशास्त जगद्गुरुम्॥ १२६॥**

*அதனால் மகிழ்ந்த கௌடபாதர் பாஷ்யத்தை இயற்றியவரும் உலகிற்கு நன்மை புரிவதில் திறமையுள்ளவருமான தன் சீடருக்குச் சீடரான சங்கரரை உலகத்தின் குருவாக- ஜகத்குருவாக- அருள் வழங்கினார்.*

शङ्कराचार्यनाम्ना तं भगवत्पादसंज्ञया।
जगद्गुरुं त्रिकालज्ञाः तुष्टुवुस्तत्र सङ्गताः ॥ १२७ ॥

அங்கு கூடியிருந்த முக்காலமுணர்ந்த பெரியோர்கள் உலகின் குருவான அவரை (சங்கரரை) சங்கராசாரியர் எனவும் பகவத்பாதர் எனவும் புகழ்ந்தார்கள்.

शंकरोऽध्यापयामास शिष्यान् ग्रन्थान्स्वनिर्मितान्।
तेषां श्रेष्ठो गुरौ भक्त्या विरराज सनन्दनः ॥ १२८ ॥

சங்கரர் சீடர்களை(ளுக்கு)த்தான் இயற்றிய நூல்களைக் கற்பித்தார். அவர்களிடையே ஸநந்தனர் குருவிடமுள்ள பக்தியால் சிறந்தவராக விளங்கினார்.

तं त्रिरध्यापयामास ग्रन्थान्प्रीतो यतीश्वरः।
सुहृत्समोऽपि हि गुरुर्भजतोऽपि प्रसीदति ॥ १२९ ॥

(அவரது பக்தியால்) மகிழ்ந்த துறவித்தலைவரான சங்கரர் அவரை (அவருக்கு) மூன்று தடவை நூல்களைப் போதித்தார். நல்லெண்ணம் படைத்தவரும் (எல்லோரிடத்தும்) சமமான எண்ணம் படைத்தவருமாயினும் குரு தன்னை அண்டினவரிடம் அதிக அளவில் அருள் புரிகிறார்.

तत्र तत्त्वमविज्ञाय छात्रा आसन्नसूयवः।
कदाचिदपरे गङ्गापारेऽतिष्ठत्सनन्दनः ॥ १३० ॥

உண்மை நிலையை அறியாமல் மாணவர்கள் ஸநந்தனர் விஷயத்தில் பொறாமை கொண்டவர்கள் ஆனார்கள். ஒரு சமயம் ஸநந்தனர் கங்கையின் அக்கரையில் நின்றிருந்தார்.

आहूतो गुरुणा शीघ्रमेहीत्योघमचिन्तयन्।
अवातरन्नदीं, सा तं पद्मैर्दध्रे पदे पदे ॥ १३१ ॥

சீக்கிரம் வா என்று குருவால் அழைக்கப்பட்டவராக பிரவாகத்தைப்பற்றி நினைக்காதவராக ஆற்றைக் கடந்தார். அந்த

ஆறு அவரை ஒவ்வோர் அடியிலும் தாமரைகளால் தாங்கினாள்.

तदप्यगणयन्नेत्य गुरोः पादावुपास्पृशत्।
सर्वे तेऽसूयवः शिष्या नमितास्त्रपयाऽभवन्॥ १३२॥

அதனையும் (கங்கை தாமரையால் தன் கால்களைத் தாங்கியதையும்) பொருட்படுத்தாமல் (இக்கரையை) அடைந்து குருவின் திருவடிகளைத் தொட்டார். (வணங்கினார்) அஸூயை கொண்ட அந்த எல்லா சீடர்களும் வெட்கத்தால் தலைகுனிந்தவர்களாக ஆனார்கள்.

ततः प्रभृति तं प्रेम्णा पद्मपादं प्रतुष्टुवुः।
अन्यादृशी तस्य भक्तिरित्थं प्रख्यापिता तदा॥ १३३॥

அதனைத் தொடர்ந்து அவரை அன்புடன் பத்மபாதர் (தாமரையைக் காலடிகளில் கொண்டவர்) எனக் கொண்டாடினார்கள். தனித்தன்மை கொண்ட அவரது பக்தி அப்போது இப்படி நன்கு வெளிப்படுத்தப்பட்டது.

द्विजः कश्चिद्वृद्धवयाः तत्रागच्छज्जगद्गुरौ।
प्रास्तावीद्व्याससूत्रेषु संशयान् स्वान्सयुक्तिकम्॥ १३४॥

ஒரு வயது முதிர்ந்த அந்தணர் அங்கு வந்தார். ஜகத்குருவான சங்கரரிடம் வியாஸர் இயற்றிய ஸூத்திரங்களில் தன் ஐயங்களை யுக்திகளுடன் வெளியிட்டார்.

तानसौ शमयामास हेतुभिः सुपुरस्कृतैः।
वादे बहुदिनव्याप्ते प्रणिधानेन पद्मपात्॥ १३५॥

शङ्करः शङ्करः साक्षाद्वृद्धो व्यासो हरिः स्वयम्।
इति विज्ञाय संहृष्टः प्राञ्जलिः समुपेत्य तौ॥ १३६॥

भगवन्तौ सूत्रभाष्यकृतौ वां प्रणमाम्यहम्।
इतीरयन्ननामाशु शङ्करोऽभूत्सुविस्मितः॥ १३७॥

இந்த சங்கரர் அவரது ஐயங்களை நன்கு விளக்கப்பெற்ற காரணங்களைக் கொண்டு சமாதானம் செய்தார். வாதம் வெகு நாட்கள் தொடர்ந்திருக்கும் போது. பத்மபாதர் தியானத்தால் "ஆசார்ய சங்கரர் சிவனே, முதியவர் வியாஸர் ஸ்ரீ விஷ்ணுவே" என உணர்ந்து மகிழ்ந்தவராகக் கைகூப்பியவராக அவர்கள் இருவரையும் அணுகி, பெருமதிப்பு கொண்ட ஸூத்ரமியற்றியவரும் பாஷ்யமியற்றியவருமான தங்களிருவரையும் வணங்குகிறேன்" எனக் கூறிக்கொண்டே உடன் வணங்கினார். சங்கரர் வியப்படைந்தவராக ஆனார்.

कृताञ्जलिस्ततो व्यासमुपतस्थे स शङ्करः।
तमुवाचातिहृष्टात्मा व्यासस्तुष्टोऽस्मि शङ्कर ! ॥ १३८ ॥

பிறகு அந்த சங்கரர் கைகூப்பியவராக வியாஸரை வணங்கினார். வியாஸர் மிகவும் மனம் மகிழ்ந்தவராக அவரை(ப்பார்த்து)ச் சொன்னார்- "சங்கரரே (நான்) மிகவும் மகிழ்ந்தவனாகிறேன்.

गीतासूत्रोपनिषदां भाष्यं विरचितं त्वया।
युक्तं गोविन्दशिष्यस्य तत्प्रख्यापय सर्वतः ॥ १३९ ॥

கீதை, பிரும்ம ஸூத்திரம், உபநிடதங்கள் இவற்றிற்கு உம்மால் பாஷ்யம் எழுதப்பட்டுள்ளது. அது கோவிந்தரின் சீடரான உமக்கு ஏற்றது. அதனை எங்கும் பரப்புவீராக.

ब्रह्मणानुमतो भूयस्त्वामाशासे यतीश्वर।
जन्मनाऽष्टवयस्कस्त्वं यतिः प्रापोऽष्टवत्सरान् ॥ १४० ॥

துறவிகளில் உத்தமரே ! பிரும்மாவினால் அனுமதிக்கப் பெற்றவராக மறுபடி ஆசீர்வதிக்கிறேன். பிறப்பால் எட்டு வயது பெற்ற நீர் துறவியாகி எட்டுவயது கூடப்பெற்றீர்.

पुनः समाः षोडशायुरस्तु ते विश्वभूतये।
सर्वतन्त्रस्वतन्त्रस्त्वं तत्त्वं बोधय विस्तरात् ॥ १४१ ॥

உமக்கு உலக நன்மைக்காக மேலும் 16 ஆண்டுகள் ஆயுள் இருக்கட்டும். நீர் எல்லா சாஸ்திரங்களிலும் தன்னிஷ்டப்படி செயலாற்றல் பெற்றவராக விளக்கமாகத் தத்துவத்தைப் போதிப்பீராக.

इत्थं लब्ध्वाऽऽयुषो दैर्घ्यं व्यासाच्छङ्करदेशिकः ।
प्रतस्थिवान्दिशि विदिश्यद्वैतं बोधयन् बुधान् ॥ १४२ ॥

சங்கரகுரு வியாஸரிடமிருந்து ஆயுளின் நீட்சியைப் பெற்று திக்கிலும் விதிக்கிலும் அறிவாளிகளை(ளுக்கு) அத்வைததத்துவத்தைக் கற்பிப்பவராகக் கிளம்பினார். (திக்கு-கிழக்கு முதலியவை. விதிக்கு - தென்கிழக்கு முதலியவை)

कालटीसम्भवः कश्चिद्विष्णुशर्माभिधो वटुः ।
सहाध्यायी शङ्करस्य तमन्विच्छन्नुपासदत् ॥ १४३ ॥

காலடியில் பிறந்தவனும், சங்கரருடன் கூடப்படித்தவனும், விஷ்ணுசர்மா என்ற பெயருள்ளவனுமான ஒரு மாணவன் அவரைத் தேடி வந்தான்.

प्रार्थयामास शिष्यत्वेनात्मनो ग्रहणं वटुः ।
दत्वा श्रीचित्सुखाख्यां तं यतिं चक्रे यतीश्वरः ॥ १४४ ॥

மாணவன் சீடனாகத் தன்னை ஏற்க வேண்டினான். துறவிகளின் தலைவரான சங்கரர் ஸ்ரீசித்ஸுகர் என்ற பெயரைத்தந்து அவனைத் துறவியாக்கினார்.

शीतार्दितं स गोविन्दगुरुं परिचरन् हिमे ।
तप्तोदकं प्रार्थयत शिवं चन्द्रकलाधरम् ॥ १४५ ॥

அந்த சங்கரர் பனிக்காலத்தில் குளிரால் வாட்டப்பெற்ற கோவிந்த குருவை(விற்குப்) பணிவிடை புரிபவராக சந்திரகலையை தரித்துள்ள சிவனை(னிடம்) வென்னீரை வேண்டினார்.

तप्तोदलहरीं शम्भुः प्रावर्तयदथान्तिके।
गोविन्दः शङ्करः शिष्याः शीतबाधां तयाऽत्यजन्॥ १४६॥

*அதனையடுத்து சிவன் அருகில் வென்னீர் ஊற்றைப் பெருகச் செய்தார். அதனால் கோவிந்தரும் சங்கரரும் சீடர்களும் குளிர்வாட்டலை அகற்றினர்.*

कदाचिच्छङ्करं स्वप्ने जगाद हरिरच्युतः।
मूर्तिर्मदीया गङ्गायां मग्नाऽस्त्युद्धर तां यते॥ १४७॥
पूजयस्वेति तस्योक्तिमाकर्ण्य च तथाऽकरोत्।

*ஒருநாள் (தன்னை அண்டியவர்களை) நழுவவிடாத ஹரி சங்கரரைக் கனவில் கூறினார்- "எனது விக்ரஹம் கங்கையில் மூழ்கிக் கிடக்கிறது. அதனை வெளியே எடு. வழிபடச் செய்" என. அவரின் சொல்லைக் கேட்டு அப்படியே செய்தார்.*

तस्यालयं कारयितुं चिन्तयन्नथ शंकरः॥ १४८॥
मात्रा प्रेषितमद्राक्षीदग्निशर्माभिधं द्विजम्।

*பிறகு அந்த ஹரிக்குக் கோயிலைச் செய்விக்கச் சிந்தித்துக் கொண்டிருந்த சங்கரர் (தனது) தாயால் அனுப்பப்பெற்ற அக்னி சர்மா என்ற அந்தணரைக் கண்டார்.*

आर्याऽम्बा जरया जीर्णा त्वां स्मरन्त्यनिशं कृशा॥ १४९॥
दिदृक्षते त्वां तद्दत्तं प्रतीच्छैतन्महद्वसु।
इत्थं निवेदयन्सद्यः पपात गुरुपादयोः॥ १५०॥

*"அன்னை ஆரியை முதுமையால் தளர்ந்தவளாக எப்போதும் உம்மை நினைப்பவளாக உடல் மெலிந்தவளாக உம்மைப் பார்க்க விரும்புகிறாள். அவளால் அளிக்கப்பெற்ற இந்தப்பெரும் நிதியை ஏற்பீர்." இவ்வாறு விண்ணப்பித்துக் கொள்பவராக உடன் குருவின் திருவடிகளில் விழுந்தார்.*

शङ्करः कारयामास तद्धनेनालयं हरेः।
न्ययुंक्त चाग्निशर्माणं नियतं पूजने हरेः॥ १५१॥

சங்கரர் அந்தப் பொருள் குவியலைக்கொண்டு ஹரிக்குக் கோயிலைக் கட்டுவித்தார். மிகவும் அடக்கமுள்ள அக்னிசர்மாவை ஹரியின் வழிபாட்டில் ஈடுபடுத்தினார்.

पद्मपादं समादिश्य विस्तारयितुमालयम्।
स्मृतो मात्रा ततः प्रागात्कालटीं गगनाध्वना॥ १५२॥

ஆலயத்தை விரிவு படுத்துவதற்குப் பத்மபாதரைக் கட்டளை இட்டுத் தாயால் நினைக்கப் பெற்றவராக அங்கிருந்து (பதரிகாசிரமத்திலிருந்து) வானவழியே காலடியை அடைந்தார்.

ननाम मातरं तस्यास्तापं जह्रे समागमात्।
उपादिशद्ब्रह्म तस्यै परमं यन्न साऽविदत्॥ १५३॥

தாயை வணங்கினார். (தான்) வந்து சேர்ந்ததனால் அவளது தாபத்தைப் போக்கினார். பரம்பொருளைப்பற்றி உபதேசித்தார். (எந்த) அதனை அவள் உணரவில்லை.

अन्त्यकालस्मृतिं तस्याः शिवविष्ण्वभिधेऽपरे।
ब्रह्मणि व्यदधाद्धीरः स्थिरां स्तोत्रैर्मनोहरैः॥ १५४॥

அறிவைத்தூண்டுபவரான சங்கரர், சிவன் விஷ்ணு என்ற பெயருள்ள ஸகுணமான பரம்பொருளிடம் அவளது கடைசி நேரத்தின் நினைவு மனத்தைக் கவரும் ஸ்தோத்திரங்களால் நிலைத்துப் பதியும்படி செய்தார்.

पश्यन्ती सगुणं ब्रह्म सद्यस्तद्रूपमापिता।
योगिगम्यं पदं प्राप माता यतिवरस्य सा॥ १५५॥

துறவிகளுக்குள் உயர்ந்தவரின் தாயான அவள் ஸகுணமான பரம்பொருளின் வடிவை நன்கு உணர்ந்தவளாக உடன் அந்நிலையை அடையப்பெற்றவளாக யோகிகளால் மட்டும் அடையத்தக்க பெருநிலையை அடைந்தாள்.

यथाप्रतिश्रुतं मातुरन्तिमेष्टिं विधाय सः।
पुनश्च तीर्थानटितुं प्रयागं प्राप शङ्करः॥। १५६॥

